29th August 1961]

SRI M. KALYANASUNDARAM : டெலிவிஷன் மத்திய சர்க்கார் பிரிவைச் சேர்ந்ததாயிற்றே, அப்படியிருக்கும்போது நம் சர்க்கார் இதை எப்படி தனியாக நடத்த முடியும்? அதோடு இப்போது கல்விக்கு மட்டும்தான் இது பயன்படுத்தப்படுமா அல்லது வேறு உபயோகத்திற்கும் பயன்படுத்தப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது மத்திய சர்க்காரைச் சேர்ந்தது. தனிப்பட்ட ஸ்தாபனங்களில் இருந்தும் இதற்கான பிரப்போஸல் வந்திருக்கின்றது. அதைப்பற்றி மத்திய சர்க்காரிடத்தில் கலந்து ஆலோசிக்க வேண்டும். முதலாவதாக கல்வித்துறையில் மட்டும் இதை பயன்படுத்தலாம் என்பது இப்போது உத்தேசம். அதன் பின்னல் வேறு விஷயங்களுக்கும் பயன்படுத்தப்படும்.

SRI A. A. RASHEED : May I know whether the Government of the United States of America have offered any television units?

THE HON. SRI C. SUBRAMANIAM : That is not a proposal of the Government of the United States of America.

SRI M. KALYANASUNDARAM : இதை அரசாங்கமே ஏற்று நடத்துமா அல்லது தனியார் துறை நடத்துமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றியெல்லாம் பரிசீலனை செய்துதான் முடிவு எடுக்கவேண்டும்.

*Loans for digging wells*

* 1461 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வடாற்காடு மாவட்டத்தில் நவம்பர் மாதத்தில் பெய்த மழையின் காரணமாக இடிந்த கிணறுகளுக்குக் கடன் கொடுத்து உதவும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI S. M. ANNAMALAI : ஸார், சர்க்கார் கிணறுகள் பாழடைந்து கிடக்கின்ற இடங்களிலிருந்து பணம் வந்தால் அதோடு கடன் கொடுத்து கிணற்றை சீர்படுத்தலாம் என்று நினைத்து பல இடங்களுக்கு பணம் கொடுப்பதில்லை. பல இடங்களில் கிணறுகள் எல்லாம் சீர்கெட்டு இருக்கின்றன. இவைகளை எல்லாம் பரிசீலனை செய்யவேண்டும். அவ்விதம் மறு பரிசீலனை செய்து இந்த பழைய கிணறுகளை எல்லாம் புதுப்பிப்பதற்கு கோருகின்ற விவசாயிகளுக்கு கடன் தருவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது சாதாரணமாக அதிகமாக மழை பெய்வதால் சேதமடைந்துவிடுகின்றன. இதற்கு வேண்டிய உதவியும் கொடுக்கிறார்கள். லான்ட் இம்ப்ரூவ்மெண்ட்

[29th August 1961

லோன் மூலம் கலெக்டர் 5,000 ரூபாய் வரையில் லோன் கொடுக்க லாம். போர்ட் 10 ஆயிரம் ரூபாய் வரையில் கடன் கொடுக்கலாம். அரசாங்கம் இதற்காக 4 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருந்தது. வட ஆற்காடு மாவட்டத்திலிருந்து மனுக்கள் ஒன்றும் வரவில்லை என்று நினைக்கிறேன்.

*Tourist Centre (Muthukulivayal)*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 1462 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 1462 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to convert Muthukulivayal in Kanyakumari as a tourist centre or hill station?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Panchayat Union Councils (Tiruttani taluk)*

* 1463 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Chief Minister be pleased to state when the Panchayat Union Councils would be constituted in the four blocks of Tiruttani taluk of Chingleput district, under the Panchayat Act of 1958?

THE HON. SRI C. SUBRAMANIAM : The question of extending the provisions of the Madras Panchayats Act, 1958 to the areas transferred from the Andhra Pradesh to the Madras State by undertaking special legislation is under the consideration of the Government. Now the Bill also has been introduced.

Panchayat Union Councils will be constituted for the four blocks of the Tiruttani taluk in the Chingleput district as soon as the said special legislation is passed into an Act.

SRI K. VINAYAKAM : May I know when the elections would be held for these panchayat union councils in those blocks?

THE HON. SRI C. SUBRAMANIAM : After the legislation is passed, steps will be taken and the programme also will be chalked out.

**SRI M. KALYANASUNDARAM** : அக்டோபர் மாதம் 2-ம் தேதிக்குள் பஞ்சாயத்துக்கள் எல்லாம் அமைக்கப்பட வேண்டும் என்பது நம்து திட்டம். அப்படியிருக்கும்போது இந்த இடத்தில் அக்டோபர் மாதம் 2-ம் தேதிக்குள் எல்லா பஞ்சாயத்துக்களும் பஞ்சாயத்து யூனியன்களும் அமைக்கப்பட்டுவிடுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : முடியும் என்றுதான் நான் நினைக்கின்றேன். அதற்காகத்தான் அவசரமாக சட்டம் கொண்டுவர முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறது. சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றிவிட்டால் அக்டோபர் இரண்டாம் தேதிக்குள் எல்லா இடங்களிலும் பஞ்சாயத்து யூனியன்கள் அமைத்து விடலாம் என்று நினைக்கிறேன்.